අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2013 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2013 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2013

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I
இஸ்லாமிய நாகரிகம் I
Islamic Civilization I

47 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**கவனிக்க :**

- ❋ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ❋ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை எழுதுக.**
- ❋ விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ❋ 1 தொடக்கம் 50 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (X) இடுவதன் மூலம் காட்டுக.

1. பின்வரும் கூற்றுகளுள் **உண்மையற்றது** எது ?
   (1) நபிகளார் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் இறுதித் தூதுவர் ஆவார்.
   (2) வாஸில் பின் அதா, இமாம் அபுல் ஹஸன் அல்-அஷ்அரீயின் மாணவர் ஆவார்.
   (3) ஸிப்பீன் யுத்தம், கலீபாவான அலி (ரலி) முஆவியா (ரலி) ஆகியோருக்கிடையே இடம்பெற்றது.
   (4) சுல்தான் முஹம்மத் அல்-பாதிஹ், கொன்ஸ்தாந்து நோபிளை வெற்றிகொண்டார்.
   (5) கி.பி. 15ஆம் நூற்றாண்டிலேயே இலங்கையில் இஸ்லாம் அறிமுகமாகியது.

2. இலங்கையில் அண்மையில் சிங்கள மொழிக்கு மொழிமாற்றம் செய்யப்பட்ட தப்ஸீர் யாது ?
   (1) தப்ஸீர் பீ ழிழாலில் குர்ஆன் (2) தப்ஸீர் அத்தபரி (3) தப்ஸீர் தப்ஹீமுல் குர்ஆன்
   (4) ஸப்வதுல் தபாஸீர் (5) தப்ஸீர் இபுனு கஸீர்

3. இமாம் அபுல் ஹஸன் அஷ்-ஷாதுலி அவர்கள் 'வபாத்'தான இடம்
   (1) கைரவான் (2) ஹுமைஸரா (3) சுர்ர மன் ரஆ (4) ஷாதுலிய்யா (5) காஸா

4. நபிகளாரிடம் தனது பத்தாவது வயதில் பணியாளராகச் சேர்ந்து, ஹதீஸ் துறைக்குப் பங்களிப்புச் செய்த ஸஹாபி
   (1) அபூஹுரைரா (ரலி) (2) அனஸ் (ரலி) (3) இப்னு அப்பாஸ் (ரலி)
   (4) இப்னு உமர் (ரலி) (5) அபூதர் அல்-கிப்பாரி (ரலி)

5. இமாம் ஹன்பலீ (ரஹ்) அவர்களின் பிரபல்யமான பிக்ஹு நூல் யாது ?
   (1) புதாஹுல் கய்ப் (2) மஸாஇல் ஸாலிஹ் (3) ரிஸாலத் அக்லிய்யா
   (4) அல்-ஆலிம் வல் முஅல்லிம் (5) கிதாபுல் உம்மு

6. கலீபாக்களான அபூபக்ர் (ரலி), உஸ்மான் (ரலி) இருவர் காலங்களிலும் குர்ஆன் தொகுப்பில் சம்பந்தப்பட்ட ஸஹாபியின் பெயர்
   (1) அம்ர் இப்னுல் ஆஸ் (2) முஸ்அப் பின் உமைர் (3) ஸைத் பின் ஸாபித்
   (4) அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (5) மஆத் பின் ஜபல்

7. இலங்கையைத் தரிசித்த நாடுகாண் பயணி இப்னு பதூதா, இலங்கையில் பயணம் செய்த பாதையைச் சுட்டும் சரியான தொகுதி
   (1) புத்தளம் - சிலாபம் - குருணாகல் - பாவா ஆதம் மலை - தெவுன்தர - காலி - கொழும்பு
   (2) புத்தளம் - சிலாபம் - குருணாகல் - வரகாபொல - குருவிட்ட - பாவா ஆதம் மலை - மாத்தறை - பேருவலை - கொழும்பு
   (3) புத்தளம் - நீர்கொழும்பு - ஹெட்டிபொல - குருவிட்ட - இரத்தினபுரி - பாவா ஆதம் மலை - மாத்தறை - வெலிகம - பேருவலை - கொழும்பு
   (4) புத்தளம் - சிலாபம் - குருணாகல் - சீதாவக்க - இரத்தினபுரி - பாவா ஆதம் மலை - தெவுன்தர - காலி - கொழும்பு
   (5) புத்தளம் - சிலாபம் - குருணாகல் - கேகாலை - இரத்தினபுரி - பாவா ஆதம் மலை - நாவலப்பிட்டி - கம்பளை - கொழும்பு

8. அல்-குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ள 'உம்முல் குரா' என்ற பதம் குறிப்பிடுவது
   (1) ஜெரூசலத்தை (2) மதீனா நகரை (3) டமஸ்கஸை (4) மக்கா நகரை (5) கூபா நகரை

[பக். 2 ஐப் பார்க்க

9. 'ஹுஜ்ஜதுல்லாஹ் அல்-பாலிஆ' என்ற நூலைத் தந்த இந்திய இஸ்லாமிய அறிஞர்
   (1) அல்லாமா இக்பால் (2) மௌலானா இல்யாஸ்
   (3) இமாம் ஸிர் ஹின்த் (4) இமாம் ஷாஹ் வலியுல்லாஹ்
   (5) மௌலானா அபுல் ஹஸன் அலி நத்வி

10. "முஸ்லிம்கள் இனத்தால் தமிழர்கள்; சமயத்தால் முஸ்லிம்கள்" என்று குறிப்பிட்டவர்
   (1) ஜீ.ஜீ.பொன்னம்பலம் (2) அப்பாபிள்ளை அமிர்தலிங்கம்
   (3) சௌமியமூர்த்தி தொண்டமான் (4) சேர் பொன்னம்பலம் அருணாசலம்
   (5) சேர் பொன்னம்பலம் இராமநாதன்

11. "அல்-குர்ஆன் படைக்கப்பட்ட ஒன்று" என்ற கருத்தை முன்வைத்த குழுவினர்
   (1) அல்-அஷ்அரிய்யா (2) அல்-முஃதஸிலா (3) அல்-முர்ஜிஆ
   (4) அஷ்-ஷீஆ (5) அல்-ஜபரிய்யா

12. தென் மாகாணத்தில் அமைந்துள்ள மூன்று அறபுக் கலாநிலையங்களைச் சுட்டும் தொகுதி
   (1) ஜாமிஆ நளீமிய்யா, மத்ரஸதுல் பாரி, குல்லிய்யது இப்னு அப்பாஸ்
   (2) மத்ரஸதுல் பாரி, பஹ்ஜதுல் இபுறாஹீமிய்யா, மக்கீ மத்ரஸா
   (3) முஅய்யதுல் இஸ்லாம், ஹிழ்ரிய்யா மத்ரஸா, பஹ்ஜதுல் இபுறாஹீமிய்யா
   (4) முர்ஸிய்யா மத்ரஸா, ஜாமிஆ நளீமிய்யா, குல்லிய்யது இப்னு அப்பாஸ்
   (5) அஷ்ரபிய்யா மத்ரஸா, பஹ்ஜதுல் இபுறாஹீமிய்யா, ரஷாதிய்யா மத்ரஸா

13. ஹதீஸ்கலையில் ஹதீஸ்களுக்கென பிரத்தியேகமான சொற்பிரயோகங்கள் உள்ளன. அவற்றுள் 'முத்தபகுன் அலைஹி' எனப்படுவது
   (1) இமாம்களான புஹாரி, முஸ்லிம் இருவரும் அறிவிப்புச் செய்தவை.
   (2) ஸஹீஹுல் புஹாரி, ஸஹீஹ் முஸ்லிம் எனும் இரண்டு ஹதீஸ் கிரத்தங்கள்
   (3) இமாம்களான புஹாரி, முஸ்லிம் இருவரதும் நிபந்தனைகளுக்கு உட்படாத ஹதீஸ்கள்
   (4) இமாம் புஹாரி, இமாம் முஸ்லிம் இருவரும் அறிவிப்புச் செய்த முதவாதிர் தரத்திலான ஹதீஸ்கள்
   (5) இமாம் புஹாரி, இமாம் முஸ்லிம் இருவராலும் அறிவிப்புச் செய்யப்பட்டு பிற்காலத்தில் ஆய்வுக்குட்படுத்தப்பட்டு ஸஹீஹ் என அடையாளம் காணப்பட்ட ஹதீஸ்கள்

14. 'பக்தாத் நிழாமிய்யா' கலாபீடத்தை ஸ்தாபித்த ஆட்சிக் குழுவினர்
   (1) செல்ஜுக்கியர் (2) புவைதுகள் (3) பாத்திமீக்கள் (4) ஐயூபியர் (5) ஸபவியர்

15. இலங்கையில் சுதந்திரத்துக்குப் பின்னர் அமைக்கப்பட்ட முதலாவது பாராளுமன்றத்தில் கலாநிதி T. B. ஜாயாவுக்குக் கிடைக்கப்பெற்ற அமைச்சு
   (1) கல்வி (2) சுகாதாரம் (3) தொழில் (4) போக்குவரத்து (5) நீதிமன்றம்

16. மத்தியகாலப் பகுதியில் இஸ்லாமிய உலகில் புகழ்பெற்ற நூல்கள் பல வெளியாகின. கீழ்வரும் X, Y நிரல்களில் நூலாசிரியர்களின் பெயர்களும் அவர்களின் ஆக்கங்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (i) அஸ்-ஸஹ்ராவி | A. கிதாபுல் அத்இமா |
| (ii) அல்-குவாரிஸ்மி | B. உயூனுல் அன்பா |
| (iii) இப்னுல் ஹைதம் | C. முகத்திமா |
| (iv) இப்னு ஸுஹ்ர் | D. கிதாபுல் ஜபர் வல் முகாபலா |
| (v) இப்னு கல்தூன் | E. கிதாபுத் தஸ்ரீப் |

   மேற்கூறப்பட்டவற்றை X நிரலுக்கமைய ஒழுங்குபடுத்தினால் அமைவது
   (1) A, C, D, E, B (2) B, E, C, A, D (3) C, E, A, B, D (4) D, C, A, B, E (5) E, D, B, A, C

17. ஹிஜ்ரத் மற்றும் ஹுனைன் யுத்தம் முதலாம் நிகழ்வுகளில் நபியவர்களுக்கு ஒத்துழைப்பு வழங்கிய இரண்டு முஸ்லிம் **அல்லாத** பிரமுகர்கள்
   (1) காலித் பின் ஸுப்யான் - ஸுஹைல் பின் அம்ர்
   (2) அபூலுஃலுஃ - அபாபுரைதா
   (3) ஆமிர் பின் புகைரா - சுராகா பின் மாலிக்
   (4) அப்துல்லாஹ் பின் உரைகத் - ஸப்வான் பின் உமையா
   (5) வரகா பின் நவ்பல் - அபூகுஹாபா

[பக். 3 ஐப் பார்க்க

18. பின்வருவனவற்றுள் சரியான கூற்றைச் சுட்டும் அலகு யாது ?
   (1) பைஅதுர் ரிழ்வான் என்ற உடன்பாடு ஹுதைபிய்யா உடன்படிக்கை இடம்பெற்ற சந்தர்ப்பத்தில் இடம்பெற்ற ஒன்றாகும்.
   (2) அஹ்ஸாப் போராட்டத்தின்போது நபிகளார் தனது சுய முடிவுக்கமையவே மதீனாவின் ஒரு பகுதியில் அகழி ஒன்றைத் தோண்ட நடவடிக்கை எடுத்தார்கள்.
   (3) நபிகளாரின் மனைவியர்களான கதீஜா, ஆயிஷா இருவரும் ஒருவரையொருவர் சந்தித்து கருத்துப் பரிமாறியுள்ளனர்.
   (4) 'தீனே இலாஹி' என்ற சிந்தனையை முன்வைத்தவர் மன்னர் ஔரங்கஸீப் ஆவார்.
   (5) இலங்கையில் நவோதய பாடசாலைகள் அமைச்சர் C.W.W. கன்னங்கரா அவர்களின் காலத்தில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

19. Averroes, Thebit எனும் பெயர்களால் ஐரோப்பாவில் அறிமுகமாகியுள்ள முஸ்லிம் புத்திஜீவிகள் இருவரதும் உண்மைப் பெயரைச் சுட்டும் தொகுதி
   (1) அர்ராஸி - அபுல் வபா
   (2) இப்னுருஷ்த் - தாபித் பின் குர்ரா
   (3) அபூ மஷ்ஹர் - அபுல் பராஜ் பக்தாதி
   (4) இப்னு ஸுஹ்ர் - இப்னுல் ஹைதம்
   (5) அலி பின் ஈஸா - இப்னு காதிப்

20. பின்வரும் மருத்துவ நூல்களில் சின்னம்மை, பெரியம்மைப் பற்றிப் பிரஸ்தாபிக்கும் நூல்
   (1) கிதாபுல் ஜுதரி வல் ஹப்ஸா (2) கிதாபுத் தஸ்ரீப் (3) கிதாபுல் இக்திசாத் பீ இஸ்லாஹ்
   (4) கிதாபுத் திப்பி அல்-மன்ஸூர் (5) அல்-கானூன் பித்திப்பி

21. கியாஸ் அமைவதற்கான அடிப்படைக் கூறுகள் யாவை ?
   (1) அஸ்ல் - பர்உ - இல்லத் - கத்ம்
   (2) மதன் - இல்லத் - ஸபப் - ஹுக்ம்
   (3) அஸ்ல் - பர்உ - இல்லத் - கழா
   (4) மதன் - ஸபப் - பர்உ - கத்ர்
   (5) அஸ்ல் - பர்உ - இல்லத் - ஹுக்ம்

22. பின்வருவன தப்ஸீர் பித்திராயா தொடர்பான சரியானதும் **பிழையானதுமான** கூற்றுகளாகும்.
   A - தப்ஸீர் பித்திராயா, தப்ஸீர் பில் மஃகூல் இரண்டும் சம கருத்துடையவை.
   B - தப்ஸீர் பித்திராயா, தப்ஸீர் பில் மஃஸூர் இரண்டும் வித்தியாசமானவை.
   C - தப்ஸீர் பித்திராயா தடைசெய்யப்பட்ட தப்ஸீர் வகை ஒன்றாகும்.
   D - தப்ஸீர் பித்திராயா, தப்ஸீர் கலையின் ஆரம்ப நூற்றாண்டுகளிலன்றி மிகப் பிற்பட்ட காலத்தில் தோற்றம் பெற்றதாகும்.
   E - தப்ஸீர் பித்திராயாவுக்கு உதாரணங்களாகத் தப்ஸீர் பைழாவி, தப்ஸீர் பத்ஹுல் கதீர் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

   இவற்றுள் சரியான கூற்றுகளாவன
   (1) A, B, C (2) A, B, E (3) A, C, D (4) B, C, E (5) B, D, E

23. பக்தாத்திலும் மொரோக்கோவிலும் தோற்றம் பெற்ற இரு தரீக்காக்களதும் ஸ்தாபகர்கள் யாவர் ?
   (1) புழைல் பின் இயாழ் - இபுறாஹீம் பின் அத்ஹம்
   (2) அப்துல் காதிர் ஜீலானி - அபுல் ஹஸன் அஸ்-ஷாதுலி
   (3) ஷிஹாபுதீன் ஸுஹ்ரவர்தி - ஸெய்யத் அஹமத் கபீர்
   (4) ஷாஹ்வலியுல்லாஹ் தெஹ்லவி - மன்ஸூர் அல்-ஹல்லாஜி
   (5) இப்னு அரபி - அபூதாலிப் அல்மக்கீ

24. தாஜ்மஹாலை நிர்மாணித்த மொகலாய மன்னர் பெயரையும் அது அமைந்துள்ள இடத்தையும் தெரிவுசெய்க.
   (1) பெருமன்னன் அக்பர் - டில்லி
   (2) மன்னன் ஹுமாயூன் - ஸ்ரீ நகர்
   (3) மன்னன் ஔரங்கஸீப் - புதுடில்லி
   (4) மன்னன் ஷாஹ்ஜஹான் - ஆக்ரா
   (5) மன்னன் சிறாஜ் பகதூர்ஷாஹ் - சென்னை

25. மதீனாவில் ஸ்தாபிக்கப்பட்ட இஸ்லாமிய அரசு அதன் முதல் நூற்றாண்டுக்குள்ளேயே ஐரோப்பிய, ஆசிய, ஆபிரிக்கக் கண்டங்களில் குறிப்பிடத்தக்க வெற்றியை அடைந்தது. அக்காலப்பகுதியில் ஜெரூஸலம், திரிப்போலி, ஸ்பெயின் முதலான பகுதிகளை வெற்றி கொண்ட ஆட்சியாளர்கள்
   (1) உமர் (ரலி), முஆவியா (ரலி), வலீத் பின் அப்துல் மலிக்
   (2) முஆவியா (ரலி), உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்), அப்துல் மலிக் பின் மர்வான்
   (3) உமர் (ரலி), உஸ்மான் (ரலி), வலீத் பின் அப்துல் மலிக்
   (4) உஸ்மான் (ரலி), அலி (ரலி), முஆவியா (ரலி)
   (5) அபூபக்ர் (ரலி), அப்துல் மலிக் பின் மர்வான், வலீத் பின் அப்துல் மலிக்

[பக். 4 ஐப் பார்க்க

4743

● **26 - 30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. கீழ்வரும் அட்டவணையில் (1), (2), (3), (4), (5) எனக் காட்டப்பட்டவற்றிலிருந்து கூற்றுகளுக்கு மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையைத் தெரிவுசெய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | பிழையானது | பிழையானது |
| (3) | சரியானது | பிழையானது |
| (4) | பிழையானது | சரியானது |
| (5) | சரியானது | முதலாம் கூற்றை விளக்குகிறது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 26. | நபியவர்கள் இஸ்லாத்தைப் போதித்தபோது ஆண்களில் அபூபக்ர் (றலி) பெண்களில் கதீஜா (றலி) சிறுவர்களில் அலி (றலி) ஆகியோர் முதன் முதலில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர். | இலங்கையில் இஸ்லாத்தின் பரவலில் ஸஹாபாக்களின் பங்களிப்பு அளப்பரியது. |
| 27. | 'மஸாதிருல் அக்லிய்யா' எனப்படும் சட்ட மூலாதாரங்கள் அல்-குர்ஆன், அல்-ஹதீஸின் நிழலில் தோற்றுவிக்கப்பட்டவையாகும். | ஸ்பெயினில் கோர்டோவாவைக் கலீபா 3ஆம் அப்துல் ரஹ்மான் தலைநகராக அமைத்துக் கொண்டார். |
| 28. | கலீபா ஹாறூனின் ஆட்சியில் நாட்டு நிர்வாகத்திலும் அபிவிருத்தியிலும் பங்கெடுத்த பர்மகீக்கள் கலீபா மஃமூனின் காலத்தில் அழித்தொழிக்கப்பட்டனர். | மகாவம்சம் குறிப்பிடும் 'யோனாஸ்' எனும் பதம் ஆரம்பத்தில் கிரேக்கர்களைச் சுட்டிக்காட்டினாலும், தொடர்ந்து வந்த காலத்தில் அரேபியரையும் சுட்டிக்காட்டியது என்ற கருத்தை முஸ்லிமல்லாத வரலாற்றாசிரியர் பலரும் எழுதி வைத்துள்ளனர். |
| 29. | திம்மீக்கள் மீது 'ஜிஸ்யா' என்ற வரி விதிக்கப்பட்டதன் மூலம் இஸ்லாமிய அரசு சிறுபான்மையினரின் பாதுகாப்பை உத்தரவாதப்படுத்தியது. | நபிகளாரின் இஸ்ரா, ஹிஜ்ரத் எனும் இரு நிகழ்வுகளிலும் அபூபக்ர் (றலி) அதிகம் நினைவு கூறப்படுகின்றார்கள். |
| 30. | அப்பாஸியர் ஆட்சியின்போது கலீபா அப்துல் மலிக் பின் மார்வான், அறபு மொழியை அரச மொழியாகப் பிரகடனப்படுத்தினார். | கலாநிதி பதியுதீன் மஹ்முத் அவர்கள் கல்வி அமைச்சராக இருந்து இலங்கையின் கல்வி மேம்பாட்டுக்கு பங்களிப்புச் செய்துள்ளார். |

● பின்வருவன நபிகளார் மேற்கொண்ட உடன்படிக்கைகளின் சில நிபந்தனைகளாகும். இவற்றைக் கவனத்தில் கொண்டு **31**ஆம், **32**ஆம் வினாக்களுக்கு விடை தருக.

A - மதீனா நகர் எதிரிகளால் தாக்கப்படும் நிலை ஏற்படின், முஸ்லிம்களும் யூதர்களும் ஒன்றிணைந்து மதீனாவைப் பாதுகாக்க வேண்டும்.
B - அல்லாஹுவைத் தவிர வேறு எவருக்கும் வணக்கம் செலுத்துவதில்லை.
C - குற்றமிழைத்தவர் எவராக இருப்பினும் தண்டிக்கப்படுவர்.
D - ஒவ்வொருவரும் அவரவர் மதத்தின்படி வாழ முழு உரிமை பெறுவர்.
E - கொலை, கொள்ளை, களவு, விபசாரம் போன்ற பாவச் செயல்களில் ஈடுபடுவதில்லை.
F - நபிகளாருக்கு எப்போதும் ஆதரவாக இருப்பதுடன் அவரின் தலைமைத்துவத்தை ஏற்றுக்கொள்ளல் வேண்டும்.
G - இரு சாராரும் தமக்கு விரும்பிய தரப்பினரோடு உடன்படிக்கை செய்து கொள்ளலாம். ஆயினும் ஒரு தரப்பினர் மற்றைய தரப்பினரின் ஆதரவாளர்களுக்கெதிராகப் போர் தொடுக்கலாகாது.
H - எதிரிகளோடு போர் செய்வதாகவோ அல்லது உடன்படிக்கை செய்வதாகவோ எதுவாக இருப்பினும் இரு தரப்பினரும் ஒன்றுகூடி கலந்தாலோசிக்க வேண்டும்.

31. மதீனா சாசனத்துடன் தொடர்புபடும் நிபந்தனைகளை உள்ளடக்கிய தொகுதி
(1) A, B, C, D (2) A, B, F, G (3) A, C, D, H (4) A, D, G, H (5) A, D, F, G

[பக். 5 ஐப் பார்க்க

32. அகபா உடன்படிக்கைகளுடன் தொடர்புபடும் நிபந்தனைகளை உள்ளடக்கிய தொகுதி
(1) B, C, D (2) B, D, E (3) B, G, H (4) B, F, G (5) B, E, F

33. ஹதீஸ்கலையில் 'மதன்' என்ற சொல்லின் மூலம் நாடப்படுவது
(1) ஹதீஸ்களின் மூலவசனம்
(2) ஹதீஸ் அறிவிப்பாளர் வரிசை
(3) ஏற்றுக்கொள்ளப்பட்ட ஹதீஸ்கள்
(4) சர்ச்சைக்குரிய ஹதீஸ்கள்
(5) கருத்து மயக்கமான ஹதீஸ்கள்

34. மாப்பிள்ளை லெவ்வை ஆலிம் மற்றும் அறிஞர் சித்திலெவ்வை ஆகியோர்களால் எழுதப்பட்ட நூல்களைச் சுட்டும் சரியான தொகுதி
(1) ஸுப்ஹான மௌலிது - துஹ்பதுன்னஹ்வு
(2) பத்ஹுத் தயான் - அஸ்ராருல் ஆலம்
(3) பிக்ஹுல் முயஸ்ஸர் - ஸபீனதுன்னஜா
(4) மதன் அபீ சுஜா - தொழுகை அடவு
(5) கிறாஅதுர் ராஷிதா - அஸன்பே சரித்திரம்

- பின்வருவன இஸ்லாமியச் சட்டம், சிந்தனைப் பிரிவுகள், தஃவா அமைப்புக்கள் போன்றவற்றின் பிரயோகத்தில் காணப்படும் சில கலைச்சொற்களாகும். இவற்றை கவனத்திற் கொண்டு **35** முதல் **38** வரையிலான வினாக்களுக்கு விடை தருக.

| | | | | |
|---|---|---|---|---|
| A - இஜ்திஹாத் | B - தப்லீஃ | C - முஹாஸபா | D - உர்பு | E - முரீத் |
| F - ஆஹாத் | G - கஸ்து | H - முதஷாபிஹ் | I - வரஉ | J - இஸ்லாஹ் |
| K - முர்ஷிதுல்ஆம் | L - கார்கூன் | M - முராகபா | N - முகல்லித் | O - இஃஜாஸ் |
| P - மஹல்லா | Q - உஸ்ரா | R - அவ்ராத் | | |

35. மேலுள்ள கலைச்சொற்களில் ஜமாஅதுத் தப்லீஃ அமைப்புடன் தொடர்புபடுபவை
(1) B, G, O, P (2) B, E, N, P (3) B, G, K, L (4) B, C, G, J (5) B, G, L, P

36. மேலுள்ள கலைச்சொற்களில் இஹ்வானுல் முஸ்லிமீன் அமைப்புடன் தொடர்புபடுபவை
(1) C, E (2) C, K (3) J, K (4) K, Q (5) M, Q

37. மேலுள்ள கலைச்சொற்களில் தஸவ்வுப் கலையுடன் தொடர்புபடுபவை
(1) C, D, E, P, Q (2) C, E, I, M, R (3) C, J, M, O, P (4) E, I, P, Q, R (5) E, J, O, Q, R

38. மேலுள்ள கலைச்சொற்களில் பிக்ஹுக்கலையுடன் தொடர்புபடுபவை
(1) A, C, D, O, P (2) A, D, F, H, N (3) A, H, I, N, R (4) C, D, E, I, J (5) D, H, J, N, O

39. நபிகளார் (ஸல்) அவர்களின் மறைவின் பின் புதிய தலைவர் ஒருவரைத் தெரிவு செய்ய ஸஹாபாக்கள் ஒன்றுகூடிய இடம்
(1) தாருன்னத்வா
(2) மஸ்ஜிதுன்னபவி
(3) ஸகீபா பனி சஈதா
(4) பைரஹாத் தோட்டம்
(5) மஸ்ஜித் கிப்லதைன்

40. பின்வருவனவற்றுள் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) ஆன்மீகத் தலைவரின் வழிகாட்டலில் அமைந்த ஆன்மீக ஒழுங்கு 'தரீக்கா' என அழைக்கப்படுகின்றது.
(2) பிக்ஹுத்துறை அறிஞர்களான இமாம் அபூ ஹனீபா, இமாம் ஷாபிஈ போன்றோர் தாம் உயிர்வாழ்ந்து கொண்டிருந்த போதே, தத்தம் கருத்தைச் சமூகமயப்படுத்தும் விதத்தில் மத்ஹப்களைத் தோற்றுவித்தனர்.
(3) சம காலத்தவர்களான இமாம் ஹஸனுன் பண்ணா, மௌலானா மௌதூதி இருவரும் கலந்துரையாடி தத்தம் தஃவா அமைப்புக்களை ஸ்தாபித்தனர்.
(4) சூபி மகான்கள் ஊதியம் பெறும் தொழில் முயற்சிகளைத் தவிர்த்துக் கொண்டதுடன் தத்தம் சீடர்களையும் உழைப்பு முயற்சிகளில் ஈடுபடுவதை அதைரியப்படுத்தினர்.
(5) 'பதாவா ஆலம்கீரி', சுல்தான் அப்துல்ஹமித் காலத்தில் தொகுக்கப்பட்ட சட்டத்துறை நூலொன்றாகும்.

41. இஸ்லாமிய சாம்ராஜ்யம் நிலைபெற்றிருந்த காலத்தில் புகழ்பெற்ற கட்டடங்கள் நிர்மாணிக்கப்பட்டிருந்தன. பின்வரும் அட்டவணையில் **X** நிரலில் கட்டடங்களின் பெயர்களும் **Y** நிரலில் அவற்றை நிர்மாணித்தவர்களின் பெயர்களும் **Z** நிரலில் அவை அமைந்துள்ள இடங்களும் காட்டப்பட்டுள்ளன.

| X | Y | Z |
|---|---|---|
| A - தாஜ்மஹால் | D - ஜபக் | G - ஸ்பெயின் |
| B - அல்-ஹம்ரா | E - ஷாஜஹான் | H - டில்லி |
| C - குதுப்மினார் | F - அல்-அஹ்மர் | I - ஆக்ரா |

மேற்படி அட்டவணையை அவதானித்து **X** நிரலுக்குப் பொருத்தமானதாய் **Y, Z** நிரல்களை ஒழுங்குபடுத்தினால் அமைவது
(1) AEI, BDH, CFG
(2) AEI, BFG, CDH
(3) ADH, BFI, CEG
(4) AFI, BEG, CDH
(5) AEH, BFG, CDI

[பக். 6 ஐப் பார்க்க

42. உமையா, அப்பாஸியா பரம்பரையினரின் முதல் ஆட்சியாளர்களான முஆவியா, அபுல் அப்பாஸ் ஆகியோர் தத்தம் ஆட்சியைத் தொடக்கி வைத்த ஹிஜ்ரி ஆண்டுகள் முறையே
(1) ஹிஜ்ரி 36 - ஹிஜ்ரி 130
(2) ஹிஜ்ரி 37 - ஹிஜ்ரி 131
(3) ஹிஜ்ரி 38 - ஹிஜ்ரி 132
(4) ஹிஜ்ரி 39 - ஹிஜ்ரி 133
(5) ஹிஜ்ரி 42 - ஹிஜ்ரி 135

43. “பூமி கோளவடிவமானது” என்ற கருத்தை முதலில் முன்வைத்த அறிஞர்
(1) அல்-கிந்தி
(2) சுலைமான் அத்தூஸி
(3) அல்-குவாரிஸ்மி
(4) ஹிஷாம் அல்-கல்பி
(5) அல்-பிரூனி

44. கலீபா வலீத் பின் அப்துல் மலிக்கின் ஆட்சிக்காலத்திலேயே இஸ்லாமிய சாம்ராஜ்யம் பெரும் வெற்றிகளைப் பதிவுசெய்தது. இவ்வெற்றியில் பங்கெடுத்த தளபதிகளைச் சுட்டும் சரியான தொகுதி
(1) ஸஅத் பின் அபீ வக்காஸ், மூஸா பின் நுஸைர், காலித் பின் வலீத், தாரிக் பின் ஸியாத்
(2) மூஸா பின் நுஸைர், ஹஜ்ஜாஜ் பின் யூசுப், தாரிக் பின் ஸியாத், முஹம்மத் பின் காஸிம்
(3) முஸ்லிம் பின் உகைபா, அம்ர் பின் ஆஸ், அபூ உபைதா, முஹம்மத் பின் காஸிம்
(4) ஹஜ்ஜாஜ் பின் யூசுப், முஸன்னா, காலித் பின் வலீத், ஸஅத் பின் அபீ வக்காஸ்
(5) மூஸா பின் நுஸைர், உக்பா பின் நாபிஃ, முஹம்மத் பின் காஸிம், ஸஅத் பின் அபீ வக்காஸ்

45. இஸ்லாமிய வரலாற்றில் ‘மிஸ்ர்’ என்ற பெயரால் அழைக்கப்பட்ட நாடு
(1) சவூதி அரேபியா
(2) எகிப்து
(3) ஈரான்
(4) ஆர்மேனியா
(5) எத்தியோப்பியா

46. ஐன்ஜாலூத் போர்க்களத்தில் முஸ்லிம்களால் வெற்றிகொள்ளப்பட்ட எதிர்த்தரப்பினர்
(1) கிறிஸ்தவர்கள்
(2) யூதர்கள்
(3) தாத்தாரியர்கள்
(4) கராமிதாக்கள்
(5) பனூகைனூகா குழுவினர்

47. கலீபாக்களான அபூபக்ர், உஸ்மான் ஆகியோரின் ஆட்சிக்காலங்களில் அல்-குர்ஆன் தொகுக்கப்படவேண்டியதன் அவசியம் பற்றி கலீபாக்களுக்கு ஆலோசனை வழங்கிய ஸஹாபாக்கள் இருவரையும் சுட்டும் தொகுதி
(1) அப்துல்லாஹ் பின் அப்பாஸ், அபூதர் அல்-கிப்பாரி
(2) முஸ்அப் பின் உமைர், அபூ ஐயூப் அல்-அன்ஸாரி
(3) அலீ பின் அபி தாலிப், தல்ஹா பின் ஸுபைர்
(4) ஸஅத் பின் அபி வக்காஸ், ஸல்மான் அல்-பாரிஸி
(5) உமர் பின் கத்தாப், ஹுஸைபதுல் யமானி

48. கண்டிய மன்னன் கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனின் ஆட்சிக்காலத்தில் ‘மடிகே பத்த’ என்ற இலாகாவுக்குப் பொறுப்பாக இருந்தவர்
(1) ராஜபக்ஷ வைத்தியதிலக கோபால
(2) வெதராளகே அபூபக்கர் புள்ளே
(3) அபூ உஸ்மான்
(4) ஷேக் ஆலிம்
(5) உஸ்மா லெப்பே பின் மௌலா முகாந்திரம்

49. ஸிப்பின் யுத்தம் இடைநிறுத்தப்பட்ட பின் கலீபா அலி, முஆவியா ஆகிய இரு தரப்பினர் சார்பாக சமாதானத் தூதுவர்கள் ஒன்றுகூடிய இடம்
(1) கர்பலா
(2) தூமதுல் ஜன்தல்
(3) ஐன் ஜாலூத்
(4) ஹுதைபியா
(5) அரபா மைதானம்

50. ‘இலங்கை முஸ்லிம்கள் - 1 000 வருட கால இன ஐக்கியம்’ என்ற தலைப்பில், இலங்கை முஸ்லிம்கள் பற்றிய நூலை எழுதியவர்
(1) பேராசிரியர் சிரிமா கிரிபமுனே
(2) கலாநிதி லோனா தேவராஜா
(3) பேராசிரியர் எஸ்.ஏ.இமாம்
(4) கலாநிதி கே.டப்ளியூ.குணவர்தன
(5) கலாநிதி டி.பி.எச்.ஜயசிங்க

***

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2013 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2013 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2013

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය II
இஸ்லாமிய நாகரிகம் II
Islamic Civilization II

47 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

அறிவுறுத்தல்கள் :

* **பகுதி I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும், **பகுதி II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் வழங்கப்படும்.

## பகுதி I

**1.** (i) ஜாஹிலிய்யாக் கால மக்களின் பொருளாதார நிலை பற்றி விளக்குக.
(ii) நபிகளாரின் மக்காவில் வாழ்ந்த கால தஃவா வழிமுறை பற்றிக் குறிப்பிடுக.
(iii) நிராகரிப்பாளர்கள் நபிகளாரில் தஃவாவை எதிர்த்த பாங்கை விளக்குக.
(iv) மதீனா ஹிஜ்ரத்துக்குப் பின்னணியாக அமைந்த காரணங்களைப் பரிசீலிக்குக.
(v) ஹுதைபியா உடன்படிக்கை முஸ்லிம்களுக்குச் சாதகமாக அமைந்த பாங்கைத் தெளிவுபடுத்துக.

**2.** (i) அப்பாஸிய கிலாபத்தின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுக.
(ii) அப்பாஸிய கிலாபத்தை ஸ்தீரப்படுத்துவதில் கலீபா மன்ஸூரின் வகிபாகத்தை மதிப்பிடுக.
(iii) கலீபா ஹாறூனின் காலத்தில் நாட்டு அபிவிருத்தியில் பர்மக்கீக்களின் பங்களிப்பை விபரிக்குக.
(iv) அப்பாஸிய கிலாபத்தில் தோற்றம் பெற்ற செல்ஜூக் சிற்றரசு பற்றி விளக்குக.
(v) அப்பாஸிய கிலாபத்தின் வீழ்ச்சிக்கு வழியமைத்த காரணிகளைக் குறிப்பிடுக.

**3.** (i) இஸ்லாமிய நாகரிகத்தின் சிறப்புப் பண்புகளைக் குறிப்பிடுக.
(ii) இஸ்லாமிய நாகரிகம் தேக்கநிலை அடைந்தமைக்கான காரணிகளை இனங்காண்க.
(iii) 'தஜ்தீத்' என்பதன் மூலம் கருதப்படுவது யாது என்பதனை விளக்குக.
(iv) மௌலானா மௌதூதி அவர்களின் தஃவாப் பணி பற்றியும் இலங்கையில் அதன் அறிமுகம் பற்றியும் எழுதுக.
(v) பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் 'இஜ்திஹாத்' பெறும் முக்கியத்துவத்தை விபரிக்குக.

## பகுதி II

**4.** (i) பிக்ஹுக் கலையின் தோற்றத்துக்கு வழியமைத்த காரணிகளை ஆராய்க.
(ii) இஸ்லாமிய சட்டவாக்கத்தில் துணை மூலாதாரங்கள் அவசியப்பட்டமைக்கான காரணங்களை விபரிக்குக.

**5.** (i) கிரேக்க நாகரிகம் இஸ்லாமிய நாகரிகத்தில் ஏற்படுத்திய சாதக, பாதகங்களை விபரிக்குக.
(ii) முஸ்லிம் ஆட்சியாளர்கள் கல்வி நடவடிக்கைகளை வளப்படுத்த எடுத்த முயற்சிகளை ஆராய்க.

**6.** (i) மேற்கின் ஜனநாயக ஆட்சிக்கும் கிலாபத் முறை ஆட்சிக்குமிடையே தென்படும் ஒற்றுமை, வேற்றுமைகளை ஒப்பிடுக.
(ii) உமையா கிலாபத்தை மறுசீரமைக்க கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் மேற்கொண்ட முயற்சிகளை விளக்குக.

**7.** (i) வானியல் துறை வளர்ச்சிக்குப் பங்காற்றிய முஸ்லிம் அறிஞர் ஒருவரின் பணிகளை விபரிக்குக.
(ii) எழுத்தணிக் கலையில் முஸ்லிம்களை ஆர்வங்கொள்ளச் செய்த காரணிகளையும் எழுத்தணி வகைகளையும் குறிப்பிடுக.

**8.** (i) கலீபா அபூபக்கர் (ரலி) அவர்கள் தனது கிலாபத்தின்போது எதிர்கொண்ட சவால்களையும் அவற்றை வெற்றி கொண்ட பாங்கையும் விபரிக்குக.
(ii) கர்பலா யுத்தம் பற்றியும் அது முஸ்லிம் உம்மத்தில் ஏற்படுத்திய பாதிப்புகளைப் பற்றியும் விளக்குக.

* * *